# SWAMI VIVEKANANDA'S

# CHICAGO PARLIAMENT OF RELIGIONS

## ADDRESS

IN TAMIL




TRANSLATED BY

## M. S. NATESON

TEACHER, AUTHOR & PUBLICIST, TRICHINOPOLY

Author of

JESUS THE CHRIST: His Mission on Earth
SWAMI VIVEKANANDA: A Sketch
SWAMI VIVEKANANDA: His Sanyasa
THE PURPOSE OF THE PROPHETS
THE TRAGEDY OF THE CELESTIAL MORTAL
THEOSOPHY AND HINDUISM
THE VIVEKANANDA ANNIVERSARY: Its Significance
IN MEMORIAM: Swami Ramakrishnananda
PRE-MUSSALMAN INDIA
HISTORY OF TRICHINOPOLY

etc. etc.


Published by

E. M. GOPALAKRISHNA KONE

Bookseller & Publisher

MADURA

1921

1893௵ ஸெப்டம்பர்மீ 19௳ அமெரிக்கா நாட்டில் சிக்காகோ நகரத்தில் கூடிய ஸர்வமத நிர்ணயக்கூட்டத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸ யதிராஜ திக்விஜய கோலாஹல ஸர்வமதஸம்ப்ரதிபன்ன பரம யோகீசுவர பகவான் ஸ்ரீராமகிருஷ்ண கரகமல ஸஞ்ஜாத ராஜாதிராஜஸேவித ஸ்ரீ விவேகாநந்த ஸ்வாமிகளால் செய்யப்பட்ட ஹிந்துமதப் பிரஸங்கத்தின் மொழிபெயர்ப்பு.

|| श्रीगुरुभ्यो नमः ||

# ஹிந்துமத ப்ரஸங்கம்



சரித்திரங்களிற் சொல்லப்பட்ட காலங்களுக்கு முன்புமுதல் தொன்றுதொட்டு வந்துள்ள மூன்று மதங்கள் இப்பொழுது உலகத்தில் நிலை பெற்றிருக்கின்றன. அவை ஆரிய மதம், ஜாரதஷ்ட மதம், யூத மதம் எனப்படும். இம்மதத்ரயங்களுக்கும் பிரமாதமான ஆபத்துக்கள் எத்தனையோ ஏற்பட்டும் அத்தனை ஆபத்துக்களுக்கும் சலியாமல் அவை ஈடு கொடுத்துத் தப்பி வந்திருப்பதே அவற்றின் இயற்கை வலிமையைக் காட்டுகிறது. ஆனால் யூதமதம் ஸர்வத்தையும் வென்று வந்ததாயுள்ள தன்குமாரியான கிறிஸ்துமதத்தைத் தன்னுள்ளடக்கிக் கொள்ளத் தவறிப்போனதுமன்றி அக்குமாரியால் தன் பிறப்பிடத்தினின்றும் துரத்தியடிக்கப்பட்டது. தவிர, ஸ்வல்ப பாரஸீக ஜனங்கள் மட்டுமே தம்முடைய உயர்ந்ததான ஜாரதஷ்ட மதத்தின் மாட்சிமைக்கறிகுறியாய்த் தற்காலம் மிகுந்திருக்கிறார்கள். ஸ்ரீ பாரத வர்ஷத்திலோ வென்றால், பற்பல கக்ஷிபேதங்கள் ஒன்

றன்பின் ஒன்ருய்த் தோன்றிப் புராதனமான வேதா ந்த மதத்தை அடியோடு அசைத்துப் பேர்க்கப் பார்த்த போதிலும், மகாபயங்கரமான பூகம்ப காலத் தில் சமுத்திர ஜலம் எவ்வாறு சற்றே பின்வாங்கிப் பின்னர் முன்னிலும் ஆயிரம் மடங்கதிகமான வேகத்துடன் ஸர்வத்தையும் வியாபிக்கும் படியான பெரும் பிரவாக ரூபத்துடன் கூடினதாய்த் திரும் புமோ, அவ்வாறே வேதோக்தமான புராண சாசுவத மதமானது, முதலில் சற்றே பின் வாங்கியதுபோல் தோற்றினும், மேன்மேல் ஓங்கிவரும் கக்ஷிபேதங் களின் ஆரவாரம் கொஞ்சம் அடங்கின பின், தன் பேருடலில் அக்கக்ஷிகளையெல்லாம் சேர்த்து அடக்கி ஐக்கியஞ் செய்து கொண்டது.

மேல் நாட்டு சாஸ்திரங்களால் புதிது புதி தாய் ஆராய்ச்சி செய்யப்பட்டயாவும் எதன் பிரதித் வனியாக ஏற்படுகின்றனவோ, அப்பேர்ப்பட்ட பிரம் மக்ஞானியினுடைய உயர்ந்த தத்துவ விசேஷமும், கீழானதாய்ப் பாவிக்கப்படுகிறதும் விக்ரகாராதன மென்று சொல்லப்படுவதுமான தத்துவ விசேஷமும், பௌத்தர்களுடைய நாஸ்திக வாதமும், ஜீனர்களு டைய நிரீசுவரவாதமும் புராதனமாயுள்ள ஆரிய தர் மத்தில் அடங்கினதே.

அப்படியானல் ஒன்றுக்கொன்று வித்தியா சப்படும் இம்மதபேதங்கள் ஒன்று சேரும் படியான பொதுவான ஸ்தலம் யாது? பரஸ்பரம் விரோத

மாய்த்தோன்றும் இம்மத பேதங்களுக்கு மூலாதாரம் எது? இவ்வாக்ஷேபங்களுக்குச் சமாதானங்கூற முயல்வதே என் ஸங்கல்பமாகும்.

வேதங்களிலருளப்பட்ட மதத்தைக் கைப்பிடித்தவர்கள் ஆரியர்கள். வேத மென்பது ஆதியுமில்லாதது, அந்தமுமில்லாதது என்பதே அவர்கள் கோட்பாடு. ஒரு கிரந்தம் எவ்வாறு ஆதியந்த மில்லாமலிருக்கக்கூடு மென்று சிலர் பரிஹாஸத்துடன் ஆக்ஷேபிக்கலாம். ஆனல் வேத மென்றால் யாதொரு கிரந்தமும் குறிக்கப்படுவதில்லை. பற்பலபேர்கள் பற்பல காலங்களில் கண்டு பிடித்த ஆத்ம ஞானதர்மங்கள் நிறைந்த பொக்கிஷ மென்பதே வேதமென்ற சொல்லின் கருத்தாயுள்ளது. எப்படி ஆகர்ஷண சக்திவிதியானது மனிதரால் கண்டு பிடிக்கப்படு முன்னு மிருந்து, இனி அவரால் முற்றும் மறந்து விடப்படினும் இருந்து கொண்டேயிருக்குமோ, அப்படியே ஆத்ம ஞானத்துக்குரிய தர்மங்கள் ஆதியந்த மில்லாமல் இருந்து கொண்டிருப்பவையாம். பரஸ்பரம் ஜீவாத்மாக்களுக்குள்ளும், அவற்றிற்கும் அவற்றின் பரமபிதாவான பரமாத்மாவிற்கும் உள்ள தர்ம நீதி ஞானசம்பந்தமாயுள்ள விதிகள் மனிதர்களால் கண்டு பிடிக்கப்படு முன்னரு மிருந்தன; இனி அவர்கள் மறந்துவிட்டாலு மிருந்தே தீரும்.

இவ்வகையான விதிகளைக்கண்டு பிடித்தவர்களுக்கே ரிஷிகள் எனப்பெயர். அவர்களை நாம்

பூர்ண ஞானவசித்தி யடைந்த பெரியோராய் விசு வவஸிக்கின்றோம். அப்பெரியோருள் மிகச்சிலாக்கிய மானவரிற் சிலர் ஸ்திரீ ஜாதிகள் என்னும் விஷயமும் சந்தோஷிக்கத் தகுந்தது.

மேற் சொல்லிய விதிகள் அந்தமில்லாதிருக்கு மாயினும் அவற்றிற்கு ஆதி அவசிய மிருந்தே தீர வேண்டுமென்றுஞ் சிலர் ஆக்ஷேபிக்கக் கூடும். வேத ங்களின் பிரமாணப்படி ஸ்ருஷ்டியானது ஆதியந்த மற்றது. மேல் நாட்டு சாஸ்திர ஆராய்ச்சியினின் றும் இப்பிரபஞ்சத்திலுள்ள ஸூக்ஷ்ம சக்தி ஸமூக மே திரிகாலத்தும் ஓரே அளவுள்ள தென்றும் ஏற் றக்குறைவு அச்சக்தித்திரளுக்கு ஏற்படாதென்றும் நாம் அறிகிறோம். ஆகையால் ஸ்ருஷ்டிக்கு முன் ஒன்றுமில்லாதகாலம் ஒன்று இருந்திருக்குமாயின் அக்காலத்தில் இப்பொழுது வேறுபாடுற்றுத்தோன் றுகிற சக்தித்திரள் எங்கிருந்தது? சிலர் அச்சக்தித் திரள் ஈசுவரனிடத்தில் அவ்யக்தரூபமாயிருந்ததென் று நினைக்கக்கூடும். அப்படியாயின் ஈசுவரன் சில காலம் வ்யக்தமாயும் சிலகாலம் அவ்யக்தமாயும் இருப்பதை இயல்பாய்க்கொண்டவர் என ஏற்படும். இவ்வாறு ஏற்பட்டால் ஈசுவரனது லக்ஷணம் மாறுந் தன்மையாகும். மாறுந்தன்மை யுடையவை யெல் லாம் இவ்வுலகில் சேர்க்கைப் பொருளே. ஒவ்வொரு சேர்க்கைப் பொருளும் ஒரு காலத்து அழிவு அல் லது பிரிவு என்ற வேறுபாட்டையடைய வேண்டும். அப்பொழுது ஈசுவரனுக்கும் அழிவு உண்டு என்ற

அசந்தர்ப்பம் ஏற்படும். ஆகையால் ஈசுவரஸ்ருஷ்டியில்லாததும் அதற்கு முந்தியதுமான காலமே கிடையாது.

இவ்விஷயத்தை ஒரு உதாரணங் கொண்டு நிரூபிக்கவேண்டுமானால் ஸ்ருஷ்டியையும் ஸ்ருஷ்டி கர்த்தாவாகிய ஈசுவரனையும் ஆதியந்த மில்லாத இரண்டு ஸமதூர நேர் கோடுகளுக்கு ஒப்பிடலாம். ஈசுவரன் மஹாசக்திஸ்வரூபி, ஸர்வநியந்தா. அவரது சக்தியினால் பிரளயஸாகரத்தினின்றும் பல கோடி பிர்ம்மாண்டங்கள் தோன்றி ஸ்வல்பகாலம் பரிபாலிக்கப்பட்டு மறுபடியும் லயத்தையடைகின்றன. இதைத்தான் ஒவ்வொரு ஆரிய வாலிபனும் தினந்தோறும் தன் ஆசிரியனுடன் சேர்ந்து ஓதுகின்றான்.

सूर्याचन्द्रमसौ धाता यथापूर्वं अकल्पयत् ।

ஸூரியனையும் சந்திரனையும் ஈசுவரன் முந்தினகல்பங்களில் போலவே அமைத்தார். மேல்நாட்டு சாஸ்திரங்களும் இவ்விஷயத்தையேதான் கூறுகின்றன.

நான் இவ்விடத்தில் நின்றுகொண்டிருக்கிறேன்; என் கண்களை மூடிக்கொண்டு சற்றே யோஜித்து 'நான் யார், நான் யார்' என்று நினைப்பேனாயின், என் முன் நிற்கும் தோற்றமென்ன? 'நான் இச்சரீரம்' என்றே அப்படியானால் நான் அசேதனமான ஜடப்பொருள்கள் சேர்க்கையாகிய இச்சரீரமேயன்றி வேறெதுவும் அல்லேனோ? வேதங்கள் நான் இச்சரீர

நில்லை யென்று உறுதியாய்க் கூறுகின்றன. நான் இச்சரீரத்தில் வசிக்கும் ஆத்துமாவாவேன். இச் சரீரம் சாகும். நான் சாகமாட்டேன். எனக்கு அழிவு இல்லை. தற்காலத்தில் நான் இச்சரீரத்தி லிருக்கிறேன். இச்சரீர மழிந்தபின் நான் இருந்து கொண்டேயிருப்பேன். இச்சரீரம் ஏற்படு முன்ன மும் நான் இருந்தேன். நான் என்கிற ஆத்மா சுத்த சூன்யத்திலிருந்து புதிதாய் உண்டாக்கப்பட்ட தில்லை. ஏனெனில், உண்டாக்குதலென்பது சேர்க்கை. சேர்க்கையென்பது பின்னொரு ஸமயத்தில் பிரிவு அல்லது அழிவு அடையக்கூடியது. ஆதலின் ஆத் மா உண்டாக்கப்பட்டிருந்தால் அது அழியவேண் டும். ஆனபடியினுல் ஆத்மா உண்டாக்கப்பட்டதன் று. இவ்வுலகிற் சிலர் ஸர்வஸம்பத்துள்ளவர்களா ய்ப்பிறந்து அழகுள்ள மேனியோடுங் கூடினவாயிருக் கின்றனர். மற்றுஞ் சிலர் நித்திய கலியாணபுருஷர் களாகவும் பாக்கியவான்களாகவும் இருக்கின்றார்கள். வேறு சிலர் துக்காக்ராந்தர்களாயும் நிர்ப்பாக்கிய மான நிலைமையுடையவர்களாயும் தோன்றுகின்றனர். சிலருக்குக் கை நொண்டி; சிலருக்குக் கால் முடம்; சிலர் ஞான சூன்யர்கள்; சிலர் துக்ககரமான கஷ்ட ஜீவனம் செய்துகொண்டு சாகமாட்டாமல் உயிர்வாழ் கின்றனர். இவர்கள் இவ்வளவு பேர்களும் சுத்த சூன்யத்தினின்றும் ஸ்ருஷ்டிக்கப் பட்டவராயின் நியாய மூர்த்தியாயும் கருணாநிதியாயும் விளங்கும் ஸர் வேசுவரன் ஏன் சிலரைப்பாக்கியவந்தர்களாகவும்

மற்றுஞ் சிலரை நிர்ப்பாக்கியர்களாகவும் படைத்தார்? அவர் ஏன் இவ்வளவு பக்ஷபாத முள்ளவராயிருத்தல் வேண்டும்? இந்தஜன்மத்தில் துக்கசாகரத்தில் மூழ்கிக்கிடப்போர் அடுத்த ஜன்மத்தில் குறைவின்றியிருப்பர் என்று சொல்வது ஸமாதானமாகமாட்டாது. நியாயமூர்த்தியாயும் கருணாநிதியாயும் விளங்குகிற ஸர்வேசுவரனுடைய ஆட்சியிலேயே ஏன் இந்தப்பிறப்பிலும் ஒருவன் நிர்ப்பாக்கியவானாய்த்தோன்றல் வேண்டும்? இது நிற்க, இப்படிப்பட்டகொள்கையானது ஸ்ருஷ்டி பேதங்களுக்குக்காரணம் கூறாமல் ஸர்வ சக்தியுள்ள ஒரு புருஷனுடைய கொடுங்கோன்மையைக் காட்டுகின்றதேயன்றி வேறில்லை. இக்கொள்கை சற்றேனும் சாஸ்திர ஸம்மதத்தைப் பெற்றதாகாது. ஆகவே மனிதன் பிறப்புக்கு முற்பட்டுள்ள காரணங்களே அவனை இப்பிறப்பில் பாக்கிய வந்தனாகவோ நிர்ப்பாக்கியவானாகவோ செய்ய வேண்டும். இக்காரணங்கள் மனிதன் முற்பிறப்பில் செய்த ஸுகிருதது ஷ்கிருதங்களாம்

மனிதனுடைய பல்வகையாயுள்ள மனச்சார்வுகளும் உடற்கூறுகளும் தாய் தந்தையரிடமிருந்து பரம்பரையாய்ப் பெற்றவாஸனையையே காரணமாகக் கொண்டனவன்றோ? இங்கு பரஸ்பரம் ஸம்பந்தமில்லாத இரண்டு நிலைகள் உள்ளன—சேதனமான மனத்தின் நிலையொன்று, அசேதனமான ஜடத்தின் நிலை மற்றொன்று. நம்மிடமுள்ளவற்றிற்கெல்லாம் அசேதனமான ஜடப்பொருளும் அதன் வியவகாரங்

களுமே சமாதானங்கூறக்கூடுமானால், ஆத்மா ஒன்றிருப்பதாக நாம் கொள்ளவேண்டிய அவசியமேயில்லை. ஆனால் சேதனமாயுள்ள மனஸின் செயல்கள் அசேதனமான ஜடத்தினின்றும் தோன்றியதென்ற அஸந்தர்ப்பம் நிரூபிக்க முடியாதாகையாலும் ஒரு தனி ஜடப்பொருளினின்றும் ஸகல அசேதன ஸ்ருஷ்டியும் பரிணாமரூபமாய்த் தோன்றியிருக்கிறது என்ற பௌதிகாத்வைதத்தை நாம் ஒப்புக்கொண்டே தீர வேண்டுமாதலால், ஒரே மூல சைதன்யத்தினின்று ஸகல பிரபஞ்சமும் அத்தியாஸமாய் தோன்றியிருக்கிறது என்கிற சுத்த அத்வைத ஸித்தாந்தத்தை அவசியமான முடிவாகவும் யுக்திக்கொத்ததாகவும் நாம் ஒப்புக்கொண்டே தீரவேண்டும். ஆனால் இவ்விஷயத்தைப்பற்றி இவ்விட மாராயவேண்டியதனவசியம்.

நமது சரீரங்கள் சில பரம்பரா வாஸனைகளோடு கூடின என்பதை நாம் மறுக்கலாகாது. சரீர வாஸனை என்றால் சரீர அமைப்பு என்றே பொருள்படும். அவ்வமைப்பின் வழியாய் ஒருவகையான சேதனம் மட்டும் அதனியல்பிற்குரிய வழியில் ஒரு விசேஷத்தொழில் புரிவதற்கு மட்டும்தான் சாத்தியம். அச்சேதனத்தின் பிரத்யேகவாஸனைக்கு அதன் முந்திய வினைகளே காரணமாகின்றன. ஒரு வகை வாஸனையையுடைய ஆத்மா அவ்வாஸனையை வெளியிற் காட்டுவதற்கு தகுந்த கருவியாயுள்ள சரீரத்தினுள்ளேயே நுழைந்து அச்சரீரமாகவே புலப்படு

வது தான் நியாயம். இத்தீர்மானம் மேல் நாட்டு சாஸ்திரத்துக்கும் ஒத்திருக்கிறது. ஏனெனில் மேல் நாட்டு சாஸ்திரம் எதற்கும் பழக்கமே காரணமென்றும் பழக்கமோ ஒரு முறை செய்ததை அடிக்கடி திருப்பிச் செய்வதால் உண்டாகிற தென்றும் கூறுகிறது. ஆகவே புதிதாய்ப்பிறந்த ஒரு ஜீவனின் இயற்கையானகுணங்களும் அந்த ஜீவன் அடிக்கடி செய்துள்ள கருமத்தின் பலன் என்றே நாம் தீர்மானிக்கவேண்டும். அவ்விதமான பழக்கங்கள் புதிதாய்ப்பிறந்த ஒரு ஜீவனுக்கு இப்பிறப்பிலேயே ஏற்பட்டிருக்க முடியாதாதலால் முற்பிறப்புகளினின்றே அப்பழக்கங்கள் வந்திருக்கவேண்டும்.

௰௪. தவிர இன்னொரு ஆக்ஷேபத்திற்கும் நான் ஸமாதானங் கூறவேண்டும். முற்பிறப்பைப் பற்றி நமக்கேன் யாதொரு ஞாபகமுமில்லை? இக்கேள்விக்குச்சமாதானம் கூறுவது வெகுஸுலபம். நான் இப்பொழுது ஆங்கிலத்தில் பேசிக்கொண்டிருக்கிறேன். அது என் தாய்ப்பாஷையாகமாட்டாது. உண்மையை நோக்குங்கால், தற்காலத்தில் என் தாய்ப்பாஷையிலுள்ள வார்த்தைகளில் ஒரு பதங்கூட என் ஞாபகத்திலில்லை. ஆனால் நான் என் தாய்ப்பாஷையைப்பற்றி நினைக்கச்சற்றே முயற்சிப்பேனாகில், அப்பாஷையின் பதங்கள் என் ஞாபகத்துக்குடனே வருகின்றன. ஆகவே ஞாபகமென்பது மனஸ் ஆகிற ஸமுத்திரத்தினுடைய மேற்புறமென்றும் அச்சாகரத்தின் ஆழ்ந்த பாகங்களில் நம்முடைய பழைய

அநுபவங்களும், அவ்வனுபவங்களால் ஏற்பட்ட ஞானமும் சேர்த்துவைக்கப்பட்டிருக்கின்றனவென்பதும் நன்கு புலப்படுகின்றன. முயற்சியுஞ்செய்து பாடுபட்டால் அந்த ஞாபகங்கள் மேற்கிளம்பி முற்பிறப்பின் அநுபவங்களையும் நாம் அறியக்கூடும்.

௰௨. இது நேரில் நிரூபித்துக்காட்டக்கூடிய பிரத்தியக்ஷப் பிரமாணம், பிரத்தியக்ஷாநுபவமே எந்த விஷயத்திற்கும் ஒப்புக்கொள்ளக்கூடிய சிறந்தபிரமாண மாதுமாதலால் ரிஷீசுவரர்களால் உலகமறியக் கூறப்பட்டுள்ள வீரவாத மாவது "ஞாபகமாகிற ஸாகரத்தை அடியிலிருந்து கிளறுவதற்குரிய ரஹஸ்யமார்க்கத்தை நாங்கள் கண்டுபிடித்திருக்கிறோம். அந்த ரஹஸ்ய மார்க்கத்தின்படி நடப்பீர்களானல் நீங்கள் உங்களுடைய முற்பிறப்புகளின் முழு நினைவையும் அடைவீர்கள்." ஆகவே ஆரியர் தாம் ஆத்மாவென்றே நம்புகின்றார்.

௰௩. ஆத்மரூபியாகிய அவரை ஆயுதம் கொல்லாது, நெருப்பு எரிக்காது, ஜலம் கரைக்காது, காற்று உலர்த்தாது.

नैनं छिन्दन्ति शस्त्राणि नैनं दहति पावकः ।
न चैनं क्लेदयन्त्यापो न शोषयति मारुतः ॥

ஆர்யமத தர்மங்களின் பிரகாரம் ஒவ்வொரு ஆத்மாவும் ஒரு வட்டம்; அவ்வட்டத்திற்குச் சுற்றுக்கோடு இன்னவிடத்திலிருக்கிறதென்று சொல்ல இய

லாது ; அதன் நடு மையமோ சரீரம்; மரணமென்பது தேகத்தைவிட்டு தேகம் இந்நடு மையம் மாறுவதே. தவிர, அசேதனமான ஜடப் பொருள்களின் தன்மைகளால் ஆத்மா கட்டுப்பட்டது மல்ல. இயற்கையிலே அவ்வாத்மா பாசமற்றதும், பந்தமில்லாமலும், பரிசுத்தமாயும், நிர்மலமாயும், பரிபூர்ணமாயுமுள்ளது. ஆனல் எக்காரணத்தினலோ அந்த அசேதன ஜடப் பொருளுடன் பந்தத்தையடைந்ததாய்ப் புலப்படுகிறது ; தன்னையும் அசேதன ஜடப்பொருளென்றே நினைக்கின்றது.

யசு. 'ஸ்வதந்திர, பரிபூர்ண, பரிசுத்த வஸ்துவாகிய ஆத்மாவானது என் இவ்வாறு அசேதன ஜடப்பொருளுக்கு அடிமையாயிருத்தல் வேண்டும்' என்று கேட்பீர்களோ ? பரிபூர்ணமாயுள்ளது அபரிபூர்ணமானதாகத் தன்னையே நம்பும்படி எவ்வாறு மயக்கங்கொண்டது ? ஆரியர்கள் இவ்வினவிற்கு விடை கூறுகிறதில்லை யென்றும் இப்படிப்பட்ட கேள்வி கேட்பதற்கு இடமேயில்லை யென்றும் சொல்லிக்கொண்டு தந்திரமாய்த் தப்பித்துக் கொள்ளுகிறார்கள் என்றுஞ் சிலர் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேம். சில ப்ராக்ஞர்கள் இப்பூமண்டலத்தில் ஸ்வல்ப பரிபூர்ண மடைந்த சில மஹாபுருஷர்களிருப்பதாகச் சொல்லி அப்படிச் சொல்வதே மேற் சொன்ன கேள்வியின் விடையாகுமென நம்பி 'ஸ்வல்ப பரிபூர்ண மடைந்த மஹாபுருஷர்கள்' முதலிய சில கடின பரிபாஷைகளால் பரிபூர்ணுபரிபூர்ண வஸ்துக்களின்

இடையே யுள்ள காலியிடத்தை நிரப்பப்பார்க்கிறார் கள். ஆனால் வெறும் வார்த்தைகள் விஷயங்களை விளக்கமாட்டா. கேள்வி கேள்வியாகவேயிருக்கு மேயன்றி விடையடைந்ததாக ஏற்படாது. சுத்த பரிபூர்ண வஸ்துவானது எப்படி ஸ்வல்ப பரி பூர்ண முள்ளதாய் மாறும்? பரிசுத்தமான அக ண்ட வஸ்து வானது எவ்விதத்தில் தன் இயற்கை யினின்று அணுவளவாயுமுள்ள மாறுதலையடையக் கூடும்? ஆனால் ஆரியரோ யதார்த்தவாதி; குதர்க்கம் செய்து காரிய ஸித்தியடையவேண்டு மென்று எண் ணங் கொண்டவரல்லர். எல்லா விஷயங்களையும் தம் மால் கூடுமான வரையில் அறிவோடும் தைரியத் தோடும் ஆராய்ந்து பார்க்கும் வல்லமையையுடைய வர். மேற் சொல்லியுள்ள கேள்விக்கு ஆரியர் கூறுஞ் சமாதானம் யாதெனில் "சேதனமான கர்த்தாவிற் கும் அசேதனமான கர்மாவிற்கும் ஏற்பட்டுள்ள ஸம் பந்தத்தின் காரணம் அநாதியான அவித்தியையே. அதாவது, இதன் காரணத்தை நானறியேன்; பரிபூர் ண வஸ்துவாகிய ஆத்மா தான் அபரிபூர்ண வஸ்து வென்றும், அவ்வஸ்துவுடன் தான் சேர்க்கப்பட்ட தென்றும், அவ்வசேதன ஜடத்தினால் தான் அடிமை யாக்கப்பட்ட தென்றும் ஏன் நினைக்கிற தென்பதை நானறியேன். ஆனால் எனக்குத் தெரியாவிட்டா லும் உள்ளது உள்ளதுதானே. இவ்வுலகத்தில் ஒவ்வொரு ஜீவனும் தன்னைச்சரீர மென்றேயெண் ணுவது ஸஹஜமாயிருக்கிறது." என் ஒவ்வொரு

ஜீவனும் இவ்வாறு எண்ணுகிறது? என் ஒவ்வொரு ஜீவனும் சரீரமே நித்தியம் என்னும் மோஹத்திற் குட்பட்டது, என்பதற்குக் காரணஞ் சொல்ல ஒரு ஆரியரும் முன் வருகிறதில்லை; முன் வரவும் மாட்டார். அது தெய்வஸங்கல்பமெனச் சொல்வது ஸமாதானமாக மாட்டாது. நானறியேன் என்றாரியர் கூறும் விடையைக் காட்டிலும் தெய்வ ஸங்கல்பமென்ற ஸமாதானம் மேலானதாக மாட்டாது

டுரு. ஆகவே ஆத்மா நித்யம், மரணமற்றது, பரிபூர்ணமாயுள்ளது, எல்லையற்றது; கண்ணுக்குப்புலப்படாமலும் எங்குங்காணப்படாமலுமுள்ள சுற்றுக் கோட்டையுடைய வட்டத்தின் நடு மையமானது இடம் மாறுவதுபோல மரணமென்னும் வியாஜத்தை வைத்துக்கொண்டு ஆத்மா தேகத்தைவிட்டுத் தேகஞ் செல்கின்றது. முற்பிறப்பின் வினைகளா லிப்பிறப்பின் நிலையும் இப்பிறப்பின் வினைகளால் இனிவரும் ஜன்மத்தின் நிலையும் நிர்ணயிக்கப் படுகின்றன. ஆத்மா புனரபி ஜனனம் புனரபி மரண மென்று, மேன்மேலு முயர்ந்தோ, பின்னேக்கி க்ஷீணித்தோ, தேகத்தை விட்டு தேகஞ் சென்று கொண்டேயிருக்கிறது. ஆனலிப்பொழுது ஒரு ஸந்தேகம் ஜனிக்கின்றது. சண்டமாருதத்திலகப்பட்டு ஒரு நிமிஷம் பொங்கியெழும் அலைமேல் தூக்கியுயர்த்தப்பட்டு மறு நிமிஷத்தில் வாயகன்ற மடுவில் முழுகடிக்கப்படும் சிறிய படகு போல் ஆத்மாவும் தனது ஸுக்ருத துஷ்க்ருதங்களின் வசமாகி அவைகளின் கதியின் படியே

அங்குமிங்குஞ் சுற்றிச்சுழன்று, காரண காரியமாகிற, எப்பொழுதும் தத்தளித்துக்கொண்டு சீறிப்பாய்ந்து செல்லும், வெள்ளத்திலகப்பட்டுச் சக்தியற்று வலி யிழந்து நிர்க்கதியாய் நிற்குமு ருக்குலைந்த மரக் கலமோ? தன் வழியிலகப்பட்ட எவ்வஸ்துவையும் நசுக்கிக்கொண்டு தன் நாதனைப்பறிகொடுத்த நாரி யின் புலம்பலையும் தாய் தந்தையைப் பறிகொடுத்த மக்களின் அழுகையையும் லக்ஷியஞ் செய்யாது இரங் காது உருண்டோடிக்கொண்டிருக்கிற காரணகாரியச் சக்காரத்தினடியில் அகப்பட்டுக்கொண்ட புழுவோ? இந்தக் கோர நிலையைக்கண்டு மனங்கலங்குகிறது; ஆனால் உலக வியற்கையின் ஏற்பாடு இவ்வாறல்லவோ யிருக்கிறது. யார் என்ன செய்யலாம்? 'இக்கதியி னின்றுந் தப்புவோம்' என்ற நம்பிக்கை கூடக் கிடை யாதா?' இதனின்றுந் தப்புவதற்கு மார்க்கமொன்று மில்லையா?' என்று துக்க ஸாகரத்தில் மூழ்கி ஏக் கங்கொண்டு மனமுருகிக்கதறும் ஜீவனின் த்வனி கரு ணா நிதியின் ஸிம்ஹாஸனத்திற் கெட்டிற்று. நம் பிக்கையுண்டாக்கக் கூடியதும் அபயத்தை தருவது மான திவ்ய மதுர மிருதுவான வாக்கானது அக் கருணாநிதியினின்றும் புறப்பட்டு வேதரிஷி ஒருவ ரின் திருவுள்ளத்திற் புகுந்து அவருக்கு ஞானோதய முண்டாக்கிற்று. அம்மஹாநுபாவர் உலகத்திலுள்ள யாவருமறிந்து கொள்ளும் வண்ணம் கம்பீரமான ஸிம்ஹநாதத்துடன் ஸுவிசேஷத்தை யறிவித்தார். "அமிருதஸ்வரூபத்தின் குழந்தைகளே, கேளுங்கள்,

உயர்ந்த திவ்யஸ்தானங்களில் விளங்குவோர்களே, நீங்களும் கேளுங்கள், இருட்டுக்கப்பால் ஸ்வயம் பிரகாசமாய் விளங்கும் புராண புருஷரைக்கண்டேன். கண்டேன், கண்டேன், காணாததைக் கண்டேன்; பரகதி யடையும் ஸாதனமாய் விளங்கும் மாயாதீத வஸ்துவைக் கண் குளிரக் கண்டேன்; அவரைக் கண்டறிவதால் நீங்களும் ஜனன மரணத்தினின்றும் மீட்சி யடையலாம். பரகதியடைவதற்கு அவரே ஸாதனம்."

शृण्वन्तु विश्वे अमृतस्य पुत्राः
आये धामानि दिव्यानि तस्थुः
वेदाहमेतं पुरुषं महान्तं
आदित्यवर्णं तमसःपरस्तात् ।
तमेव विदित्वातिमृत्युमेति
नान्यःपन्था विद्यतेऽयनाय ॥



"அமிருதஸ்வரூபத்தின் குழந்தைகளே"—என்ன மதுரமான திவ்ய மிருதுவான அபய நாமம்! ஸகோதரர்காள், அமிருதஸ்வரூபத்தின் நித்தியாநந்தத்துக் குரியவர்களே என்று இனிய வாக்கினால் உங்களை நான் அழைக்க அனுமதி கொடுங்கள். ஆரியரொருவர் உங்களைப் பாவிகளென்றழைக்க உடன்படமாட்டார். நீங்கள் ஸர்வேசுவரரின் குழந்தைகள், அமிருதஸ்வரூபமான நித்தியாநந்தத்திற்பங்

துடைய பரிசுத்த பரிபூர்ண வஸ்துக்கள். இப்புவனத்தில் ஸஞ்சரிக்கும் தெய்வங்களாகிய உங்களைப் பாவிகளென்றோ வழைப்பது? அப்படி ஒரு ஜீவனைப் பார்த்தழைப்பதே பெரும்பாவம். மனிதஸ்வபாவத்துக்கே அது ஒரு பெரும்பழிக்கு இடமாகும். ஓ ஸிம்ஹங்களே, எழுந்திருங்கள், நீங்கள் ஆடுகளென்ற மோஹத்தை யுதறி எறியுங்கள்; நீங்கள் நித்யாத்மாக்கள்; பாசபந்தமற்ற என்றும் மழியாத திருவருள் பெற்ற நித்தியாநந்தர்கள் நீங்கள். நீங்கள் ஜடமல்ல; நீங்கள் சரீரங்களல்ல; அசேதன ஜடமே உங்களடிமை; நீங்கள தனடிமையல்ல.

௰௬. இம்மாதிரியாக, வேதங்கள் உலக இயற்கையைக் கருணையற்ற காரண காரிய தர்மங்களின் ஸமூகம் மட்டுமென்றாவது காரண காரியங்களாலேற்படும் முடிவற்ற நிலை மட்டுமென்றாவது கூறுகிறதில்லை; ஆனால் உலக இயற்கையின் விதிகளுக் கதிபனாய் விளங்கும், அசேதன ஜடப்பொருளுக்குள்ளும் அவற்றை நடாத்தும் சக்திக்குள்ளும் உள்ளும் புறமும் வியாபித்துள்ள, ஈசனொருவர் உண்டென்றும், அவ் வீசனது ஆக்ஞையினாலேயே காற்று வீசவும் நெருப்பு எரியவும் மேகங்கள் மழையாய்ப் பொழியவும் யமன் உலகத்துலாவவும் ஏற்படுகிற தென்றும் வேதங்கள் கூறுகின்றன.

भयादस्याग्निस्तपति भयात्तपति सूर्यः ।
भयादिन्द्रश्च वायुश्च मृत्युर्धावति पञ्चमः ॥

௰ஏ. அவ்வீசனது ஸ்வரூபந்தானென்ன ?

௰அ. அவர் எங்குமுள்ளவர்; பரிசுத்தமானவர்; உருவமற்றவர்; ஸர்வசக்தியுள்ளவர்; பரமகருணாநிதி. "எமது தந்தையும் நீரே, எமதன்னையும் நீரே, எமதன்புடைய மித்திரனும் நீரே; ஸர்வ வல்லமைக்கும் மூல புருஷன் நீரே; ஜகத்தின் பாரத்தை வகிப்பவர் நீரே; ஸ்வாமி, இஜ்ஜீவதசையின் சிறு சுமையைப் பொறுத்துத்தாங்க எமக்கு வல்லமையைத் தந்தருள்வீராக"—என்றல்லவோ வேதருஷிகள் கானம் செய்திருக்கிறார்கள்.

पिता त्वं माता त्वं दयिततनयस्त्वं प्रियसुहृ-
त्त्वमेव त्वं मित्रं गुरुरसि गतिश्चासि जगताम् ।
त्वदीयस्त्वद्भृत्यस्तव परिजनस्त्वद्गतिरहं
प्रपन्नश्चैवं सत्यहमपि तवैवास्मि हि भरः ॥

அப்பேர்ப்பட்ட ஈசனை நாம் பஜிப்பதெப்படி? பக்தியினாலேயே. இஹபாரத்துக்குரிய வஸ்து யாதையும் காட்டிலும் அரிய பொருளாக அவரை நினைத்தன்பு பாராட்டியே அவரை நாம் வழிபடவேண்டும்.

௰கூ. வேதங்களால் போதிக்கப்படும் பக்தி மார்க்கம் இதுவே. இம்மேதினியில் ஈசனின் அவதாரமாய்க் கொண்டாடப்படும் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மா இப்பக்தி மார்க்கத்தைப் பூர்ணமாய் விவரித்துப் போதித்திருக்கும் விதத்தை சற்றே உற்று நோக்கு

௨0. ஜலத்தில் வளர்ந்து ஜலத்தில் நனைக்கப்படாமலிருக்கும் தாமரையிலைபோல், கடவுளிடத்து மனமும் காரியத்தின்கண் கையுமாயும் மனிதன் இவ்வுலகத்திலிருந்து வாழவேண்டும் என்பதே ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் உபதேசம்.

௨௧. இஹபரஸுகத்தைக் கருதி ஈசுவரனிடத்திற் பக்தி செலுத்துவது சிலாக்கியந்தான்; ஆனால் பலன் வேண்டாமல் கைங்கரியரூபமாய் அவரைத் பஜிப்பது சாலவுநன்று. "ஈசா, தனம் வேண்டேன், புத்திர பாக்கியம் வேண்டேன், வித்தை வேண்டேன், உமது கருணையுண்டானால் நூற்றுக்கணக்கான கஷ்டத்தையும் அடையச்சித்தமாயிருக்கிறேன்; ஆனால் பலாபேக்ஷையில்லாமல் உம்மிடமே நான் எப்பொழுதும் பக்தி செலுத்தும்படி யென்னை அநுக்கிரஹிக்க வேண்டும். என் பக்தி கேவலம் கைங்கர்யரூபமாய் மட்டு மிருத்தல் வேண்டும்."—என்பதே புராதனஸ்தோத்திரம்.

न धनं न जनं न सुन्दरीं
कवितां वा जगदीश कामये ।
मम जन्मनि जन्मनीश्वरे
भवताद्भक्तिरहैतुकी त्वयि ॥

அக்காலத்து பாரதவர்ஷத்துச் சக்கிரவர்த்தியாயுள்ளவரும் ஸ்ரீகிருஷ்ணபரமாத்மாவின் சிஷ்யருமாகிய ஒருவர் தன் சத்துருக்களால் ராஜ்ஜியத்தைவிட்டுத்

துரத்தப்பட்டு ஹிமாசலத்தின் தாழ்வரை யிலுள்ள ஒரு காட்டில் தம் மனைவியுடன் ஒளிந்து வஸிக்கும் படி நேரிட்டது. அங்கே ஒரு நாள் அரசியார் அவரை நோக்கி, "ஆர்யபுத்திரரே, மஹாதர்மிஷ்டரான நீரும் என் இவ்வளவு துக்கம னுபவிக்கவேண்டும்?" என்று வினவினர். அதற்கு யுதிஷ்டிரர் "என்னரசியே, இதோபார் இந்த ஹிமாசலத்தை. அஃது எவ்வளவு கம்பீரமாகவும் எவ்வளவு மனோஹர மாகவு மிருக்கின்றது! அதனிடத்தில் என்னன்பு நாடுகின்றது. அது எனக்கொன்றையுங் கொடுக்கவில்லை. ஆனால் காம்பீர்யமும் ஸௌந்தர்யமு முள்ள விடமெங்கும் செல்லுமியல்பு என்னன்புக்குண்டாதலால் அவ்வாறேற்படுகிறது. இதேமாதிரி என்னன்பு ஈசனிடம் செல்கின்றது. ஸர்வ ஸௌந்தர்யத்துக்கும் ஸர்வோத்க்ருஷ்டத்துக்கும் காரணமாயுள்ள மூலபுருஷன் அவரே யாதலால், அன்பிற்குப் பாத்திர பூதமாயுள்ளவர் அவர் ஒருவரே யாதலால், என்னியல்பு அவரிடத்தன்பு பாராட்டுவதாதலால், நான் அவரைப்பஜனம் செய்கிறேன். நான் எதனையும் உத்தேசித்துப் பிரார்த்தியேன்; நான் எதனையும் வேண்டேன். அவருக்கிஷ்டப்பட்ட விடத்தில், காட்டிலோ வீட்டிலோ, அவரென்னை வைக்கட்டும்; கைங்கர்ய ரூபமாய் அவரிடம் அன்பு பாராட்ட நான் கடமைப்பட்டவன். லாபத்தை உத்தேசித்து அன்பாகிற சரக்கை வைத்துக்கொண்டு வியாபாரஞ் செய்ய என்னுலியலாது."

नाहं कर्मफलान्वेषी राजपुत्रि शरांयुत ।
ददामि देयमित्येव यजे यष्टव्यमित्युत ॥
धर्म एव मनः कृष्णे स्वभावाच्चैव मे धृतम् ।
धर्मवाणिज्यको हीनो जघन्यो धर्मवादिनाम ॥

உ௰உ. ஆத்மா தெய்வத்தன்மையுடையதென்றும் ஜடப்பொருளின் பந்தத்திலகப்பட்டுழலுகின்றதென்றும், இப்பந்தம் நீங்குங் காலையில் பரிபூர்ணமேற்படுமென்றும் வேதோபதேசமேற்படுகின்றது. ஆகையால் இப்பரிபூர்ணத்திற்கு வேதங்களின் பரிபாஷை முக்தியென்றேற்படுகிறது. முக்தியாவது நிவிர்த்தி, அபரிபூர்ணத்தின் பந்தங் களினின்றும் நிவிர்த்தி, ஜனன மரணத்தினின்றும் நிவிர்த்தி.

உ௰௩. இப்பந்தம் ஈசுவரனுடைய அநுக்கிரஹத்தினால் மட்டும் நீங்கக்கூடும்; அவ்வநுக்கிரஹம் பரிசுத்தாத் மாக்களுக்கு மட்டுந்தான் வரும். ஆகவே, ஈசுவரனது அநுக்கிரஹம் வேண்டுமானால் பரிசுத்தத்தையடைய வேண்டும். அவ்வநுக்கிரஹம் எம்மாதிரி பிரவிர்த்திக்கின்றது! சித்த சுத்தியுடையவர்க்கு ஈசுவரன் பிரத்தியக்ஷ தரிசனம் கொடுக்கிறார்; மாசற்ற பரிசுத்தமான மனிதன் ஈசுவரனை நேரே தரிசிக்கின்றான்; அதுவும் இந்த ஜன்மாவிலேயே. அப்பொழுது தான் " அவனுடைய மனக் கோணலெல்லாம் நிமிர்ந்து நேராகின்றன; ஆக்ஷே

பங்களெல்லாம் நிவிர்த்தியாகின்றன; பயங்கரமான காரணகாரிய ரூபமான விதிகளின் விளையாட்டுக் காளாகிறதில்லை"

भिद्यते हृदयग्रन्थिश्छिद्यन्ते सर्वसंशयाः ।
क्षीयन्ते चास्य कर्माणि तस्मिन्दृष्टे परावरे ॥

இது தான் ஆர்யதர்மத்தின் பிராணதாரம்; பிரதான ஸாராம்சம்; ஆரியரொருவர் வெறும் வார்த்தைகளைக் கொண்டும் சாஸ்திர வாதங்களைக் கொண்டும் திருப்தியடைய மாட்டார்; ஸாதாரணமாய் இந்திரியங்களுக்குப் புலப்படும் வஸ்துக்களுக் கப்பால் வேறொன்றிருக்குமாயின், அவ்வஸ்துவை நேரில் கண்ணாரக்கண்டு ஆனந்தமடைய விருப்பங்கொண்டவர்; அசேதன ஜடப்பொருளல்லாத ஆத்மா ஒன்று தன்னிடமிருக்குமாயின், பரம கருணா மூர்த்தியான ஸர்வவியாபியான பரமாத்மா ஒன்றுண்டாயின், அவ்வாத்மா விடத்து நேரிற் செல்லும் யோக்கியதையுடையவர்; அவர் அவரைக் கண்களினாற் காண வேண்டும். அப்பொழுது தான் ஆக்ஷேபங்கள் ஸமாதானமடையும். ஆதலின் ஆத்மாவைப் பற்றியும் ஈசுவரனைப்பற்றியும் வேதருஷிகள் கொடுக்கக் கூடிய சிறந்த பிரமாணமென்னவென்றால் "நான் ஆத்மாவைத் தரிசித்திருக்கிறேன்; ஈசனைக்கண்ணாரக் கண்டிருக்கிறேன்."

वेदाहमेतं पुरुषं महान्तम् ।

அதுவே தான் பரிபூர்ண நிலையின் தன்மை. ஏதா

திலுமொரு கொள்கையையாவது கோட்பாட்டை யாவது நம்புவதற்குக் கஷ்டப்படுவதும் முயற்சி செய்வதும் ஆர்ய தர்மத்தின் இயல்பன்று, பிரத்தியக்ஷாநுபவத்தை நாடுதலே அதனியல்பு; கேவலம் நம்பிக்கையைக்கொண்டு திருப்தியடையாமல் பிரத்தியக்ஷாநுபவத்தை நாடுதலும் பரமாத்மஸ்வரூபமாய் விளங்குதலுமே ஆர்ய தர்மத்தின் லக்ஷணமாகும்.

௨௰௪. இந்தப் பிரகாரம், ஆரியர்களுடைய மதக் கோட்பாட்டின் இடைவிடாப் பிரயத்தனம் அதிகக் கஷ்டப்பட்டுப் பரிபூர்ணத்தையடைதலே, தெய்வத் தன்மையடைதலே, தெய்வத்தையடைதலே, தெய்வத்தைத் தரிசித்தலே. இவ்வாறு கடவுளையடைவதும், கடவுளைத் தரிசிப்பதும், 'பரமண்டலத்திலுள்ள பிதாவைப்போல்' பரிபூர்ணமடைதலுமே ஆரியர்களுடைய மதக்கொள்கையாகும்.

௨௰௫. பரிபூர்ணத்தையடைந்த மனிதன் எவ்வாறாகிறான்? அளவில்லாத ஆனந்தமே அவன் வாழ்க்கையாகும். எப்பொருளில் மட்டும் ஆனந்தத்தை மனிதன் நாடவேண்டுமோ, அப்பேர்ப்பட்ட தனிப்பொருளாகிய கடவுளையடைந்து அகண்டபரிபூர்ணாநந்தத்தை அநுபவிக்கின்றான்; தெய்வத்தோடு கூட நித்தியாநந்த ஸாகரத்தில் மூழ்கிக்கிடக்கிறான். இவ்விஷயத்தில் எல்லா ஆரியர்களும் ஒற்றுமைப்பட்டவர்கள். பாரதவர்ஷத்திலுள்ள எல்லாக் கக்ஷிக்கா

ரர்களும் பொதுவாய் ஒப்புக்கொள்ளக்கூடிய மதக் கொள்கை இதுவே.

உயசு. ஆனால் இப்பொழுது ஒரு சந்தேகம் ஏற்படுகிறது. பரிபூர்ணமகண்டம்; அகண்ட மிரண்டல்லது மூன்றாயிருக்கமாட்டாது. அது குணங்களுள்ளதாகவு மிருக்கமாட்டாது. அது வ்யக்தமாயிருத்தலுங் கூடாத விஷயம். ஆகவே ஜீவன் அகண்டபரிபூரணத்தை யடையுங்கால், அது பிரம்ஹத்தினிடத்திற் கலந்து, பகவானைத் தன்னியற்கையியல்புள்ள ஓரே உண்மையான பரிபூர்ண ஸ்வரூபமுள்ள அகண்ட சச்சிதானந்த மென்று அனுபவித்தறிய வேண்டும்.

ब्रह्मविद्ब्रह्मैव भवति ।

இவ்விஷயம் ஜீவாத்மா தன் பிரத்யேகத்தன்மையையிழந்து மரம் கல் முதலியவைகளைப் போன்ற தாகுமென்பதாய்ச் சிற்றறிவுள்ள சிலர்களால் இகழ்ச்சியாய்க் கூறப்பட்டுள்ளதை அடிக்கடி நாம் கேள்விப்பட்டிருக்கிறோம்; அச்சிற்றறிவாளர்களாலியற்றப்பட்டுள்ள கிரந்தங்களிலும் படித்திருக்கிறோம். "காயம் பட்டறியாதவன் புண்வடுவைக்கண்டுப் பரிஹஸிக்கின்றனன் போலும்."

உயஎ. அந்நிலை அப்படிப்பட்ட தொன்றுமல்லவென்று உங்களுக்கு நான் நிச்சயமாய்க் கூறுவேன். இச்சிறு சரீரத்துக்குரிய அறிவை யனுபவிப்பதே ஆனந்தமாகுமானல் இரண்டு சரீரங்களின் அறிவை

யனுபவிப்பது அதிக ஆனந்தமாகும். அவ்வாறே அனேக சரீரங்களின் அறிவு ஏற்படுங்கால் ஆனந்தமும் அதிகப்படுமல்லவா? ஆகவே ஸர்வவியாபகமான அறிவையனுபவிக்கும்போது ஸர்வோத்கிருஷ்டமான நிரதிசயாநந்தாநுபவப் பிராப்தியல்லவோ ஏற்படும்?

உ௰அ. ஆனபடியினால் அப்பேர்ப்பட்ட ஸர்வவியாபகமான ஸ்வரூபத்தையடைய வேண்டுமாயின், துக்கத்துக்கிடமான இவ்வல்ப பிரத்யேகத்வமாகிற சிறை ஒழிய வேண்டும். நான் பிராணமயமாகும்பொழுது தான் மரணமென்னை விட்டகலும்; நான் ஆனந்தமயமாகும்பொழுதுதான் துக்கமென்னை விட்டகலும்; நான் விக்ஞானமயமாகும்பொழுது தான் அக்ஞானமென்னை விட்டகலும்; இது தான் மேல் நாட்டு சாஸ்திரீய அவசியமான முடிவு. தனித்தனி சரீர ரூபமாய்த்தோன்றுவனவெல்லாம் பொய்த் தோற்றமென்றும் அகண்டமான அசேதன ஜடசமுத்திரத்தில் இடை விடாமல் மாறிக்கொண்டிருக்கும் அலை போலுள்ளது என் சரீரமென்றும், எனது மற்றொரு அம்சமாகிய ஆத்மாவோடு கூடின கடைசித் தீர்மானம் அத்வைதமென்றும் மேல்நாட்டு விக்ஞான சாஸ்திரம் எனக்கு நிரூபித்திருக்கின்றது.

உ௰௯. மேல்நாட்டு சாஸ்திரமாவது எல்லா விஷயங்களுக்கும் மூலமாயுள்ள ஐக்கியத்தைக் காண்பதுவே. எந்த சாஸ்திரமும் அத்தகைய பூர்ண ஐக்கிய வஸ்துவை அடைந்தவுடன் அதற்கப்புறம் செல்

லாமல் நின்றுவிட வேண்டும்; ஏனெனில் அது தன் எல்லையையடைந்து தன் கருத்தை நிறைவேற்றித் தன் ஸங்கல்பத்தைப் பூர்த்தி செய்ததாகும். ரஸாயன சாஸ்திரம் ஒரே மூலபதார்த்தத்தினின்று மற்ற மூலபதார்த்தங்கள் யாவும் உண்டாகக் கூடிய நிலையை யடைந்தபின் மேற் செல்லுதல் கூடாமல் நின்று விடும். அசேதன ஜடசக்தி சாஸ்திரமும் ஒரே மூல சக்தியின் விவகாரங்களாலேயே ஸகல சக்திகளு மேற்படும் படியான நிலையை யடைந்தபின் மேற் செல்லுதல் கூடாமல் நின்றுவிடும். அதே பிரகாரம் அழியுந்தன்மையுள்ள இப்பிரம்மாண்டத்தில் அழிவற்ற பிராணமயமான ஒருவரை யடைந்த பின், எப்பொழுதும் மாறிக்கொண்டேயிருக்கும் உலகத்திற்கு நிரந்தரமான ஆதாரமாயுள்ளவரை யடைந்த பின், எந்தப் பரமாத்மாவின் பொய்ப்பிரதிபிம்பங்களாக ஸகல ஜீவாத்மாக்களும் தோன்றுகின்றனவோ அப்பரம புருஷரை யடைந்தபின், மத சாஸ்திரமும் மேற் செல்லுதல் கூடாமல் நின்றுவிடும். இவ்விதமாக அநேகத்வத்திலிருந்தும் த்வைதத்திலிருந்தும் முடிவான அத்வைதம் ஸித்தியாயிற்று. அதற்கப்புறம் எம் மதத்திற்கும் செல்ல ஸாத்தியமில்லை. இது தான் ஸகல சாஸ்திரங்களின் ஸித்தி, ஸர்வ ஞானத்தின் எல்லை.

௩௰. ஸகல சாஸ்திரங்களும் இறுதியில் இத்தீர்மானத்துக்கே வரவேண்டும். உலகத்தில் காணப்படுவதெல்லாம் புதிதாய் ஸ்ருஷ்டி செய்யப்பட்டன

வல்லவென்பதும் ஒரே மூல வஸ்துவின் பேதமான தோற்றமென்பதும் தற்காலத்தில் மேல்நாட்டு சாஸ்திரத்தின் ஸித்தாந்தம். அனேக காலமாகத் தாம் மதித்துப் பெருமை பாராட்டி வந்த தத்துவங்களெல்லாம் அதிகமான வாக்கு வல்லமையோடும் மேல்நாட்டு சாஸ்திர ஸித்தாந்தங்களின் பிரமாணத்தோடும் உபதேசிக்கப்படப்போகின்றனவென்றும் விஷயத்தைக் காண ஆரியர்கள் நிரம்ப ஸந்தோஷப்படுகிறார்கள்.

௩௰௧. இனிமேல் வேதாந்த ஞானத்தின் உயர்ந்த ஸ்தானத்திலிருந்து பாமர ஜனங்களின் மதத்தைப் பற்றிச் சற்றே யோஜிப்போம். ஆரம்பத்திலேயே பாரதவர்ஷத்தில் அனேகேசுவர ஆராதனை கிடையாதென்று நான் உங்களுக்குச் சொல்லிவிடலாம். ஒவ்வொரு தேவாலயத்திலும் ஒருவர் சற்றே நின்று கவனிப்பாரானால், ஸர்வ வியாபகத்வம் உள்பட ஈசுவரனுடைய ஸகல லக்ஷணங்களையும் தேவ விக்கிரஹங்களுக்கே ஸ்வாமி தர்சனம் செய்பவர்கள் ஆரோபிப்பதைக் காணலாம். இது அனேகேசுவர ஆராதனமாகாது. "ரோஜா புஷ்பம் வேறெப் பெயரிட் டழைக்கப்படினும் தன் மணங் குன்றாது." வெறும் பெயர் பூண்டல் விஷய விளக்கத்தை யுண்டாக்காது.

௩௰௨. நான் பால்யமாயிருக்கும்போது பாரத வர்ஷத்தில் ஒரு ஸமயத்தில் ஒரு பெரிய ஜனக் கூட்டத்தின் முன் ஒரு கிறிஸ்தவப் பாதிரியார் பிரஸங்

கம் செய்துகொண்டிருந்ததைக் கேட்டுக்கொண்டிருந்தது இப்பொழுது என் ஞாபகத்துக்கு வருகிறது. அவர் ஜனங்களைப் பார்த்துச் சொல்லிக்கொண்டிருந்த அனேக விஷயங்களுள் "என் கையிலுள்ள கம்பினால் உங்கள் விக்கிரஹத்தை நான் ஒரு அடி அடித்தால் அது என்ன செய்யும்?" என்றொரு கேள்வியையும் கேட்டார். உடனே ஒருவர் "உமமுடைய தேவனை நான் வைதால் அவர் என்ன செய்வார்?" என்று சுருக்கெனத் திருப்பிக் கேட்டார். "நீர் இறந்த பிறகு தண்டனை யடைவீர்" என்றார் பாதிரியார். "அதே பிரகாரம் எங்கள் விக்கிரஹமும் நீர் இறந்த பிறகு உம்மைத் தண்டிக்கும்" என்று பதில் பிறந்தது. ஒரு விருக்ஷத்தின் குணங்களை அதன் பலன்களால் நாம் அறியக்கூடும். விக்கிரஹாராதனைக்காரர்கள் எனப்படுவோர்களுள், நல்லொழுக்கத்திலும், ஆத்ம ஞானத்திலும், தெய்வ பக்தியிலும் அவர்களுக்கு ஸமானம் எங்குமில்லை என்னும்படியுள்ள மனிதர்களை நான் பார்த்திருக்கும்பொழுது "பாவத்தினின்றும் பரிசுத்தம் பிறக்குமா?" என்னும் வினா என் மனத்தில் ஜனிக்கின்றது.

௩0௩. மூட பக்தி மனிதருக்குப் பெருஞ் சத்துரு; மூடப் பிடிவாதமோ வெனில் அதனினுங் கொடிது. கிறிஸ்துவர் ஏன் கோவிலுக்குச் செல்லுகிறார்? ஏன் சிலுவை பரிசுத்தமெனக் கருதப்படுகிறது? ஜெப வேளையில் ஏன் முகம் ஆகாயத்தை நோக்கித் திருப்பப்படுகிறது? ரோமன் காத்தலிக்கர்களுடைய கோ

வில்களில் ஏன் அனேக விக்கிரஹங்களிருக்கின்றன? ஜெப வேளையில் பிராட்டஸ்டண்டர்களின் மனது களில் ஏன் அனேக மூர்த்தி பாவனைகள் ஏற்படு கின்றன? ஸகோதரர்காள், சுவாஸம் விடாமல் எப் படி நம்மால் இருக்கமுடியாதோ, அவ்வாறே மூர்த்தி பாவனையில்லாமல் நாம் ஒன்றையும்பற்றி நினைக்கமுடி யாது. பாவனு ஸம்யோகவிதியினுலே ஜடஸ்வரூபமான மூர்த்தி மனோபாவத்தின் நிலைமையும் மனோபாவம் ஜடரூப மூர்த்தியையும் எழுப்புகின்றன. ,கையி னுலேதான் பஜனம் செய்யும் காலத்தில் ஆரியர்கள் ஒரு வெளிப்படையான மூர்த்தியை உபயோகிக்கி றார்கள். எவ்வஸ்துவைக் குறித்துத் தாம் தியானிக் கின்றனரோ அவ்வஸ்துவின்பேரில் தம் மனத்தை நிலைநிறுத்தி வைக்க அந்த ஜடமூர்த்தி தமக்குதவி செய்கிறதென்று அவர் சொல்வர். உங்களைப்போ லவே அவருக்கும் ஜடரூபம் ஈசுவரனல்லவென்றும் ஸர்வ வியாபியல்லவென்றும் தெரியும். யோஜிக்குங் காலையில் ஸர்வ வியாபகமென்னும் பதத்தினுல் உல கத்திலனேக மனிதர்களுக்கு என்ன விளங்குகிறது? அது வெறும் வார்த்தை, வெற்றுடையாளமே தவிர வேறில்லை. ஈசுவரனுக்கு விஸ்தீர்ணமுண்டோ? இல் லாவிட்டால் நாம் ஸர்வ வியாபகத்தைப்பற்றி நினைக் குங்கால் விஸ்தாரமான ஆகாசத்தைப்பற்றியே தவிர வேறெதையும் பற்றி நினைக்கிறதில்லை.

௩௰௪. எவ்வகையிலாயினும், மனவியற்கை முறை யை யனுஸரித்து, அகண்டமென்றுல் விஸ்தாரமான

நிலவாணமாயுள்ள ஆகாசத்தைப்பற்றியாவது ஸாக ரத்தைப்பற்றியாவது நாம் நினைக்க வேண்டியிருக்கி றது போலவே, பரிசுத்தமென்றால் திருக்கோவில், மசூதி, சிலுவை, முதலியவைகளின் ஞாபகமும் நமக் கேற்படுகிறது. ஆரியர்கள் தமக்குப் பரிசுத்தம், நிர் மலத்வம், ஸத்யம், ஸர்வ வியாபகத்வம் முதலிய நினை வுண்டாகுங்கால் பற்பல தேவ விக்கிரஹங்களைப்பற் றியும் மூர்த்தி ரூபங்களைப்பற்றியுமே நினைக்கின்ற னர். ஆனால் ஆரியர்களுக்கும் இதர மதஸ்தர்களுக்கு முள்ள வித்தியாஸமோவெனில் "சிலர் தமக் கபி மானமாயுள்ள கோவில் முதலிய விஷயங்களிலேயே தம் ஜீவதசை முழுவதையுங் கழித்து அபிவிர்த்தி யடையாமல் வருந்துகின்றனர்; ஏனெனில் மதமென் றால் அவர்களுடைய ஞாபகத்தில் சில கொள்கை களை உண்மையென நம்புதலும் இதர ஜீவன்களிடத் துப் பரோபகாரமாய்த் தொழில் புரிவதுந்தான் என்று கருதப்பட்டதாகின்றது. ஆனால் ஆரிய தர் மத்தின் ஸாரமோ பிரம்ம ஸாக்ஷாத்காரமாகின்றது." மனிதன் பிரம்ம ஸாக்ஷாத்காரத்தை யடைந்தே பிரம்ம ஸ்வரூபமாய் விளங்கல் வேண்டும். ஈசுவர பிம்பங்களும், கோவில்களும், சாஸ்திரங்களும் மனி தன் ஆத்ம ஞானமடைவதற்கு ஸாதனங்கள் மட்டு மேயாகும்; மனிதனோ மேன்மேலும் உயர் நிலையை நாடிச் செல்லல்வேண்டும்.

கூ௰௫. அவன் வழியிலெங்குந் தங்குதல் கூடாது. "பகிராராதனை, விக்ரஹாதிகளின் பூஜாவிசேஷம்,

முதலியவைகள் தாழ்ந்த படி ; உத்தம நிலைமையை யடைய முயலுங்கால் அந்தரங்க பூஜை இரண்டாம் படியாகும். ஈசுவர ஸாக்ஷாத்காரத்தை யடைதலே உயர்ந்த பதவியாகும்.'' என வேதங்கள் முறையிடுகின்றன.

उत्तमो ब्रह्मसद्भावो ध्यानभावस्तु मध्यमः ।
स्तुतिर्जपोऽधमो भावो बहिःपूजाऽधमाधमा ॥

கவனித்துப்பார்க்குங்கால் ஈசுவர பிம்பத்திற்கு முன் ஸாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்யும் திரிகரண சுத்த பக்தனே "அவரைச் சூரியனால் விளக்கிக்காட்ட முடியாது, சந்திரனாலும் முடியாது, தாராகணங்களாலும் முடியாது, மின்னற் கொடியினாலுமாகாது, அக்னியெனப்படுவோனாலுமாகாது. இவை யாவும் விளக்கிக் காட்டப்பட வேண்டுமானால் அவ்வாறு செய்யக்கூடியவர் அவரே" யென்று ஸ்துதிக்கின்றான்.

न तत्र सूर्यो भाति न चन्द्रतारकं
नेमा विद्युतो भान्ति कुतोऽयमग्निः ।
तमेव भान्तमनुभाति सर्वं
तस्य भासा सर्वमिदं विभाति ॥

ஆனால் அம்மனிதன் எவ்விக்கிரஹத்தையும் பழிக்கின்றதில்லை ; எவ்விக்கிரஹாராதனையையும் பாபகர்ம

மெனக் கூறுவதுமில்லை. மனித வாழ்க்கையில் அஃ தொரு பருவமென்றமட்டுந்தான் அவனதைக் கருதுகின்றான். முதிர்ந்து வளர்ந்த மனிதன் குழந்தைப் பருவத்தினின்றன்றோ கிரமேண வளர்கின்றான். அப்படியாயின் இளமைப்பருவம் அல்லது யுவப்பருவம் தோஷமுள்ளதென்று வயோதிகன் கூறல் தகுதியாமோ?

௩௰௬. விக்கிரஹாராதனை செய்தே தீரவேண்டுமென்று ஆரியர்கள் வற்புறுத்துவதுமில்லை. ஒரு மனிதன் தேவாலம்பத்தின் உதவியைக்கொண்டு பிரம்ம ஸாக்ஷாத்காரமாகிற தன் தெய்வத்தன்மையை ஸுலபமாயடையக்கூடுமாயின் அதைப்பாவமெனக்கூறுவது நீதியோ? அப்படிவியைக்கடந்து அப்பால் சென்றபிறகுந்தான் அவன் அதைத்தோஷமெனச் சொல்லுதலுங் கூடாது. பிசகான மார்க்கத்தைத் தள்ளிவிட்டு ஸத்யமான மார்க்கத்தை யனுசரிப்பதென்பது ஆரியர்க்குக் கிடையாது. அவர் ஸத்தியத்தினின்றே ஸத்தியத்துக்குச் செல்லுகிறார்; கீழ்த்தரமான ஸத்தியத்தினின்றும் மேலான ஸத்தியத்திற்குச் செல்லுகிறார். அசேதனமான ஜடபதார்த்த ஆராதனம் முதல் உயர்ந்த தத்வோபாஸனை வரையிலுமுள்ள ஸகல மதங்களும் ஆதியந்த ரஹிதமான நித்திய வஸ்துவை யடைந்து பிர்ம்மஸாக்ஷாத்காரத்தை யனுபவிக்கும்பொருட்டுத் தன் ஜன்மம், ஸஹவாஸம் இவற்றிற்கேற்றவாறு, பிரதி ஜீவாத்மாவும் செய்யும் முயற்சிகளே யென்பதாரியர் கருத்து.

ஒவ்வொரு மதமும் ஜீவாத்மா செல்லும் பந்தாவில் ஒவ்வொரு இடமேயென்றேற்படும். ஆகாச மார்க்கத்தில் கொஞ்சங்கொஞ்சமாயுயரப் பறந்துகொண்டேசென்று அதிக வல்லமையடைந்து ஜ்யோதிர்மயமான ஸூர்யனையடைய முயலும் இளங்கருடனாக ஒவ்வொரு ஜீவாத்மாவும் கருதப்படுகிறது.

௬௰௭. நானாவிதமான பொருள்களுக்குள்ள ஐக்கியத்தன்மையே உலக இயற்கையின் ரீதியாதலால், ஆரியருமதை யுணர்ந்து அவ்வாறே ஒப்புக்கொண்டிருக்கின்றனர். இதர மதங்கள் ஒவ்வொன்றும் சில கண்டிப்பான விதிகளை ஏற்படுத்தி அவ்விதிகளையே உலகத்திலுள்ள ஜனஸமூகம் முழுவது மொப்புக்கொள்ளவேண்டுமென்று கருதுகின்றன. அவைகள் ஒரே சொக்காயைக் காண்பித்து அவ்வங்கி ஜாக், ஜான், ஹென்றி, முதலிய எல்லோருக்கும் பொருந்தவேண்டுமென்கின்றன. ஜான் அல்லது ஹென்றிக்கு அச்சட்டை பொருந்தாவிடில் அவர் தம் சரீரத்தைப் போர்த்தத் துணியில்லாமலிருக்கவேண்டும். அகண்ட வஸ்துவைப்பற்றி நினைக்கவோ அல்லது பேசவோ அல்லது அவ்வஸ்துவின் ஸாக்ஷாத்காரத்தையனுபவிக்கவோ வேண்டுமாயின், மனத்திற்கு விஷயமாகக்கூடிய அகண்ட மற்ற விக்கிரஹமோ, சிலுவையோ, சந்திரகலையோ, இவற்றின் உதவியினால்தான் அவ்விஷயம் கைகூடுமென்றும், இவ்வடை

